# கணிதம்

## தரம்

## 4



## கல்வி வெளியீட்டுத் திணைக்களம்



சகல பாடநூல்களையும் இலத்திரனியல் ஊடாகப் பெற்றுக்கொள்வதற்கு www.edupub.gov.lk வலைத்தளத்தை நாடுங்கள்.

## தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

**ஆனந்த சமரக்கோன்**
**கவிதையின் பெயர்ப்பு.**

## முன்னுரை

பூகோளக் கிராமத்திற்கு நாளந்தம் சேர்க்கப்படும் வளமான புதிய அறிவு நமது கற்றல் கற்பித்தல் நடவடிக்கைகளில் உள்ளடக்கப்படுவது அவசியமானதாகும். அத்தோடு நமது நற்பண்புகளையும் அதனுடன் ஒன்றிணைக்க நாம் மறந்துவிடக்கூடாது. இந்நேர் மனப்பாங்குகளைப் பாதுகாப்பதுடன் மேலும் சிறந்த ஒரு மாணவர் பரம்பரையை உருவாக்கும் மகத்தான பணிக்கு அவசியமான தரமான கற்றல் சாதனங்களை வழங்குவது எமது திணைக்களத்தின் பிரதான நோக்கம் என்பதை வலியுறுத்துகின்றேன்.

பாடவிடயத்திற்கு மேலதிகமாக பல உருக்களையும் மற்றும் சொற்களையும் கொண்டு ஆக்கப்பட்டுள்ள இப்பாடநூல்கள் எதிர்கால உலகத்திற்குச் செல்லும் பாதையின் ஒளிவிளக்குகள் போன்றனவாகும். நீங்கள் பாடசாலைக் கல்வியை முடித்து வெளியேறும்போது மகிழ்ச்சியுடன் நினைவுகூரக்கூடிய இனிமையான பல நினைவுகளை இப்பாடநூல்களின் பக்கங்கள் கொண்டிருக்கும் என்பது உறுதியாகும்.

ஆசிரியர்களிடம் இருந்து அறிவைப் பெற்றுள்ள உங்களுக்கு அறிவும் இரசனையும் நிறைந்த சிறந்த பரிசுப் பொருளான இப்பாடநூல்களின் சிறந்த பலன்களை அடைவதற்கான அறிவைத் தேடும் பயணத்தில் வீரநடை போடுவது அவசியமாகும். அரசாங்கம் பாடநூல்களுக்காகச் செலவிடுகின்ற பெருந்தொகைப் பணத்திற்கு விலைமதிப்பற்றதொரு பெறுமதியை மாணவர்களாகிய உங்களால் மட்டுமே வழங்க முடியும். வாழ்வில் எதிர்கொள்ளும் பல்வேறு பிரச்சினைகளை வெற்றிகரமாக முகங்கொடுத்து நாளைய உலகை மலரச்செய்வதற்கு நாட்டின் சிறார்களான உங்களுக்கு இயலவேண்டுமென அன்புடன் பிரார்த்திக்கின்றேன்.

இப்பாடநூலாக்கத்திற்கு அர்ப்பணிப்புடன் ஒத்துழைப்பு வழங்கிய எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு அங்கத்தவர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது உளம் நிறைந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**பீ. என். அயிலப்பெரும**

கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

இசுருபாய

பத்தரமுல்ல

2020.06.26.

| | | |
|---|---|---|
| **கண்காணிப்பும் மேற்பார்வையும்** | : | **பீ. என். அயிலப்பெரும**<br>கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம் |
| **வழிகாட்டல்** | : | **டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி**<br>கல்வி வெளியீட்டு ஆணையாளர்<br>(அபிவிருத்தி)<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம் |
| **இணைப்பாக்கம்** | : | **அ. ஞானேஸ்வரன்**<br>அபிவிருத்தி உத்தியோகத்தர்<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம் |
| **பதிப்பாசிரியர் குழு** | : | **வி. சாரதாம்பாள்**<br>உதவிக் கல்விப் பணிப்பாளர்<br>வலயக் கல்விப் பணிமனை<br>தீவகம் |
| | | **அ. குலரத்தினம்**<br>உதவி ஆணையாளர்<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம் |
| | | **ஜீ. எம். வடநம்பி**<br>சிரேஷ்ட விரிவுரையாளர்<br>நில்வளா தேசிய கல்வியற் கல்லூரி<br>வில்பிட, அக்குரஸ்ஸ |
| | | **ஆர். எம். கே. த சில்வா**<br>பதிற் பணிப்பாளர்<br>ஆரம்பக் கல்வித் திணைக்களம்<br>தேசிய கல்வி நிறுவகம்<br>மகரகம |
| | | **எச். எம். கே. ஏரத்**<br>பிரதிப் பீடாதிபதி<br>சாரிபுத்த தேசிய கல்வியியற் கல்லூரி<br>நித்தம்புவ |

**வை. மானெல் குணசிங்க**
பிரதிக் கல்விப் பணிப்பாளர்
ஆரம்பக் கல்விக் கிளை
கல்வி அமைச்சு

**கே.கே. ஹிமாலி பிரியதர்ஷனி**
உதவி ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

**எழுத்தாளர் குழு** : **என். வாகீசமூர்த்தி**
ஓய்வுபெற்ற கல்விப் பணிப்பாளர்

**ஆர். எஸ். ஈ. புஸ்பராஜன்**
ஓய்வுபெற்ற உதவிக் கல்விப் பணிப்பாளர்

**கே. ஏ. சீ. சீ. முனிதாச**
அதிபர்
மே/ ஹோ புவக்பிடிய வடக்கு மகா வித்
தியாலயம்
புவக்பிடிய

**ஏ. டீ. பீ. புஸ்பிக்க மிய**
பிரதி அதிபர்
மே/ஜய/ கொட்டாவ வடக்கு தர்மபால வித்
தியாலயம்
ஹோக்கந்தர வீதி, பன்னிப்பிட்டிய

**டீ. ஏ. டீ. சீ. தசநாயக்க**
ஆசிரியர்
விசாகா கல்லூரி
கொழும்பு 5

**டீ. கே. ஏ. எஸ். யாப்பா**
ஆசிரியர்
மே/ஜய அனுலா வித்தியாலயம்
நுகேகொட

**எம். ஞானலதா**
ஆனந்தா வித்தியாலயம்
கொழும்பு 10

| | | |
|---|---|---|
| **மொழிப் பதிப்பாசிரியர்** | : | **காந்திமதி துஷ்யந்தன்**<br>ஓய்வு பெற்ற ஆசிரியர் |
| **சரவை பார்ப்பு** | : | **ச. சிவபாலன்**<br>ஓய்வு பெற்ற ஆசிரியர் |
| **கணினி வடிவமைப்பு** | : | **உஷாநந்தினி பரமநாதன்**<br>கணினி உதவியாளர்<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம் |
| **முகப்பு அட்டையும் சித்திரங்களும்** | : | **கே. ஏ. சமன் கலுபோவில**<br>மே/கம்/ அனுர மத்திய மகா<br>வித்தியாலயம்<br>யக்கல |

# பொருளடக்கம்

## நூலாக்கக் குழுவின் குறிப்பு

பாடசாலை ஆரம்பக் கலைத்திட்டத்தை இற்றைப்படுத்தித் தயாரிக்கப்பட்ட புதிய கலைத்திட்டம் 2016 ஆம் ஆண்டில் தரம் 1 இல் ஆரம்பிக்கப்பட்டது. அதற்கேற்ப 2017 ஆம் ஆண்டில் தரம் 2 இற்கும் 2018 ஆம் ஆண்டில் தரம் 3 இற்கும் புதிய கலைத்திட்டத்திற்கேற்பப் பாட நூல்கள் தயாரிக்கப்பட்டன. 2019 ஆம் ஆண்டிற்குத் தரம் 4 இற்காக ஒரு புதிய கணிதப் பாடநூல் தயாரிக் கப்பட்டுள்ளது.

ஆசிரியர் வழிகாட்டியில் குறிப்பிடப்பட்ட செயற்பாடுகளில் மாணவர்களை ஈடுபடச் செய்து பாடநூலில் உள்ள பயிற்சிகளுக்கு வழிப்படுத்தத்தக்கவாறு பாடநூலைத் தயாரித்தல் ஆக்கக் குழுவின் நோக்கமாக இருந்தது.

மாணவர்களை மையமாகக் கொண்ட கற்றல் - கற்பித்தல் செயன்முறையினூ டாகப் பெறும் அனுபவங்களை மேலும் உறுதிப்படுத்துவதற்கும் மாணவர் களை மதிப்பிடுவதற்கும் இங்கு இடம்பெறும் பயிற்சிகளைப் பயன்படுத்தலாம். ஆசிரியர் வழிகாட்டியின் மூலம் முன்வைக்கப்பட்டுள்ள கற்றல் கற்பித்தல் ஒழுங்குமுறைக்கேற்ப இங்கு பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. இப்பயிற்சிகளில் ஒரு பகுதிக்குப் பாடநூலிலேயே விடை எழுதத்தக்கதாக இருக்கும் அதே வேளை வேறொரு பகுதிக்குப் பயிற்சிப் புத்தகத்தில் விடை எழுத வேண்டும். இங்கு வினாவைப் பிரதி செய்யாமல் உரிய பயிற்சி எண்ணை எழுதி அதற்கு எதிரே விடையை மாத்திரம் எழுதினால் போதும்.

தரம் 4 இற்கான புதிய கணிதப் பாடநூலைச் செயல் நூலாகவும் பயன்படுத்த வேண்டும் ஆகையால் ஒவ்வோர் ஆண்டிலும் இந்நூலை மாணவர்களுக்குப் புதிதாக வழங்க வேண்டும்.

பாடநூலைப் பயன்படுத்தும்போது மாணவர்களிடம் ஆக்கத்திறன், பிரசினங்களைத் தீர்ப்பதற்கான ஆற்றல், தொடர்பாடும் ஆற்றல், ஒழுங்கமைப்பு போன்ற திறன்கள் விருத்தியடையுமென எதிர்பார்க்கப்படுகின்றது. ஒருவ ரோடு ஒருவர் சுமுகமாகச் செயற்பட்டுச் சுற்றாடலிற்கும் பணி உலகிற்கும் இசை வாக ஓய்வுநேரத்தைச் செலவிட்டு, சமநிலைப்பட்ட ஆளுமையைக் கொண்ட ஒரு சிறந்த பிரசையாகத் திகழ்வதற்குத் தேவையான தேர்ச்சியை அடைவதற்குத் தரம் 4 இற்கான கணிதப் பாடநூல் மாணவர்களுக்கு உதவுமென ஆக்கக் குழு எதிர்பார்க்கின்றது.

**ஆக்கக் குழு**

# எண்கள் - 1



**1** வெற்றிடங்களை நிரப்புவோம். எண்களை வாசிப்போம்.

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | 99 | 100 | | | 103 | | | 106 | | |
| (2) | | 234 | | 236 | | | | 240 | | |
| (3) | | | 372 | | | | 376 | | | 379 |
| (4) | 499 | | | | 503 | | | | 507 | |
| (5) | | 601 | | | 604 | | | 607 | | |

(6) 728, 729, ......, ......, ......, ......, ......

(7) ......, ......, ......, ......, ......, 851, 850

(8) 968, ......, ......, ......, ......, 973, ......

(9) ......, 983, ......, ......, ......, 979, ......

(10) ......, 994, 995, ......, ......, ......, ......

**2** அட்டவணையை நிரப்புவோம்.

| எண் | எண்பெயர் |
|---|---|
| 99 | தொண்ணூற்றொன்பது |
| | இருநூறு |
| 307 | |
| 444 | |
| | ஐந்நூற்று முப்பது |
| | தொள்ளாயிரத்து ஒன்பது |

**3** எண்பெயரை எழுதுவோம்.

(1) 500 - ............................

(2) 600 - ............................

(3) 700 - ............................

(4) 800 - ............................

(5) 900 - ............................

**4** கீழே கோடு வரையப்பட்டுள்ள எண்ணின் எண்பெயரை எழுதுவோம்.

(1) சரஸ்வதி வித்தியாலயத்தில் ஆரம்பப் பிரிவிலுள்ள மாணவர்களின் மொத்த எண்ணிக்கை 856 ஆகும்.

..............................................................................

(2) விற்பனைக்காகக் கொண்டு வந்த முட்டைகளில் 150 முட்டைகள் உடைந்திருந்தன.

..............................................................................

(3) ஒரு தொழிற்சாலையில் திங்கட்கிழமை உற்பத்தி செய்யப்பட்ட பாதணிகளின் எண்ணிக்கை 249 ஆகும்.

..............................................................................

(4) தரம் 4 இலுள்ள மாணவர்களுக்குப் பகிர்ந்தளிப்பதற்காகக் கொண்டுவரப்பட்ட கணிதப் பாடநூல்களின் எண்ணிக்கை 509 ஆகும்.

..............................................................................

(5) கூரையை வேய்வதற்காகக் கொண்டுவரப்பட்ட ஓடுகளின் எண்ணிக்கை 375 ஆகும்.

..............................................................................

**5** அட்டவணையில் உள்ள வெற்றிடங்களை நிரப்புவோம்.

| எண் | இலக்கம் | இடப்பெறுமானம் | இலக்கம் வகைகுறிக்கும் பெறுமானம் |
|---|---|---|---|
| 236 | 6 | *ஒன்றினிடம்* | 6 |
| 743 | 4 | | 40 |
| 370 | | *பத்தினிடம்* | |
| 505 | 0 | | 0 |
| 837 | | *நூறினிடம்* | |
| 900 | 9 | | |

**6** விடை எழுதுவோம்.

(1) நூறினிடம் 4, பத்தினிடம் 7, ஒன்றினிடம் 5 ஆகவுள்ள எண் யாது?

(2) ஒன்றினிடம் 0, நூறினிடம் 3, பத்தினிடம் 6 ஆகவுள்ள எண் யாது?

(3) பத்தினிடம் 0, ஒன்றினிடம் 0, நூறினிடம் 7 ஆகவுள்ள எண் யாது?

(4) நூறினிடம் 9, ஒன்றினிடம் 9, பத்தினிடம் 0 ஆகவுள்ள எண் யாது?

**7** எண்சட்டங்களில் குறிக்கப்பட்டுள்ள எண்களை எழுதுவோம்.




(1)



(2)




(3)




(4)




(5)



**8** எண் அம்புக்குறி அட்டைகள் மூலம் குறிக்கப்பட்டுள்ள எண்களை எழுதுவோம்.

**உதாரணம் :**

| உதாரணம் | (1) | (2) |
|---|---|---|
| 300, 70, 2 → 372 | 100, 50, 2 → ........................ | 800, 60 → ........................ |

| (3) | (4) | (5) |
|---|---|---|
| 700, 3 → ........................ | 900, 8 → ........................ | 900, 90, 9 → ........................ |

**9** ஒரு வார காலத்தில் ஒரு விற்பனைக் கூடத்தில் விற்பனை செய்யப்பட்ட பத்திரிகைகள் பற்றிய தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| மொழிமூலம் | பத்திரிகைகளின் எண்ணிக்கை |
|---|---|
| தமிழ் | 789 |
| சிங்களம் | 987 |
| ஆங்கிலம் | 798 |

(1) எந்த மொழிப் பத்திரிகை கூடுதலாக விற்பனையாகியுள்ளது? அவ்வெண்ணிக்கை யாது?

(2) எந்த மொழிப் பத்திரிகை குறைந்தளவு விற்பனையாகியுள்ளது? அவ்வெண்ணிக்கை யாது?

(3) மூன்று மொழிமூலங்களிலும் விற்பனையாகியுள்ள பத்திரிகைகளின் எண்ணிக்கைகளைக் கூடியதிலிருந்து குறைந்தது வரை ஒழுங்கில் எழுதுவோம்.

**10**

| | | |
|---|---|---|
| 5 1 7 | 9 4 0 | 8 3 6 |

(1) ஒவ்வொரு கட்டத்திலுமுள்ள மூன்று இலக்கங்களையும் பயன்படுத்தி உருவாக்கக்கூடிய பெரிய எண்களை வெவ்வேறாக எழுதுவோம்.

(2) எழுதிய மூன்று எண்களையும் சிறிய எண்ணிலிருந்து பெரிய எண்வரை ஒழுங்கில் எழுதுவோம்.

(3) ஒவ்வொரு கட்டத்திலுமுள்ள மூன்று இலக்கங்களையும் பயன்படுத்தி உருவாக்கக்கூடிய சிறிய எண்களை வெவ்வேறாக எழுதுவோம்.

(4) எழுதிய மூன்று எண்களையும் பெரிய எண்ணிலிருந்து சிறிய எண்வரை ஒழுங்கில் எழுதுவோம்.

# கூட்டுவோம் 1



**1** ஒன்றினிடத்திலிருந்து பத்தினிடத்துக்குக் கொண்டு சென்று கூட்டுவோம்.

| நூறுகள் | பத்துகள் | ஒன்றுகள் |
|---|---|---|
| | | |
| | | |

**உதாரணம் :**

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | | 1 | |
| | 1 | 3 | 7 |
| + | 2 | 1 | 8 |
| | 3 | 5 | 5 |

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 1 3 3 | 4 1 8 | 2 2 5 | 1 0 4 | 3 4 8 |
| + 2 4 8 | + 3 1 8 | + 4 4 6 | + 5 3 9 | + 3 0 2 |

| (6) | (7) | (8) | (9) | (10) |
|---|---|---|---|---|
| 6 5 7 | 6 0 5 | 5 2 6 | 4 5 8 | 8 2 9 |
| + 1 3 5 | + 3 0 8 | + 2 4 4 | + 2 2 3 | + 3 5 |

**2** இரண்டு கொடிகளிலுமிருந்து ஒரு தடவைக்கு ஓர் எண் வீதம் எடுத்து அவற்றைக் கூட்டுவோம். இவ்வாறான 8 பிரசினங்களைத் தயாரிப்போம்.




**உதாரணம்:**

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 3 | 5 | 6 |
| + | | 3 | 8 |
| | 3 | 9 | 4 |

**3** பத்தினிடத்திலிருந்து நூறினிடத்துக்குக் கொண்டு சென்று கூட்டுவோம்.

| நூறுகள் | பத்துகள் | ஒன்றுகள் |
|---|---|---|
| | | |
| | | |

உதாரணம் :

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 1 | | |
| | 2 | 5 | 3 |
| + | 1 | 7 | 5 |
| | 4 | 2 | 8 |

| (1) | (2) | (3) | (4) |
|---|---|---|---|
| 4 5 3<br>+ 2 9 5 | 5 7 9<br>+ 1 5 0 | 3 7 8<br>+ 4 3 1 | 5 9 3<br>+ 3 2 2 |

| (5) | (6) | (7) | (8) |
|---|---|---|---|
| 5 6 0<br>+ 3 7 0 | 2 7 3<br>+ 3 8 6 | 4 4 0<br>+ 3 8 5 | 5 7 4<br>+ 2 7 2 |

**4** ஐந்து போத்தல்களில் இடப்பட்டுள்ள முத்துகள் பற்றிய தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| சிவப்பு | நீலம் | பச்சை | மஞ்சள் | ஊதா |
|---|---|---|---|---|
| 84 | 281 | 333 | 590 | 325 |

(1) சிவப்பு, நீலம் ஆகிய முத்துகளின் கூட்டுத்தொகை யாது?

(2) மஞ்சள் முத்துகளைக் கொண்ட போத்தலின் உள்ளே ஊதா முத்துகளை இடும்போது அப்போத்தலிலுள்ள முத்துகளின் மொத்த எண்ணிக்கை யாது?

(3) பச்சை, நீல முத்துகளின் கூட்டுத்தொகையானது சிவப்பு, மஞ்சள் முத்துகளின் கூட்டுத்தொகையிலும் கூடியதா? குறைந்ததா?

**5** கூட்டுவோம்.

| (1) | (2) | (3) | (4) |
|---|---|---|---|
| 1 1 3 | 4 5 8 | 4 0 4 | 6 0 3 |
| + 2 4 7 | + 2 6 0 | + 2 5 8 | + 3 0 9 |
| | | | |

| (5) | (6) | (7) | (8) |
|---|---|---|---|
| 5 2 3 | 5 1 6 | 2 5 6 | 6 3 3 |
| + 2 9 4 | + 3 6 6 | + 3 7 1 | + 2 8 6 |
| | | | |

| (9) | (10) | (11) | (12) |
|---|---|---|---|
| 7 4 6 | 4 2 | 5 9 8 | 7 3 4 |
| + 2 5 | + 1 9 7 | + 7 0 | + 1 9 0 |
| | | | |

**6** வசனங்களை எழுதிப் பிரசினங்களைத் தீர்ப்போம்.

(1) ஒரு பெட்டியில் 475 சவர்க்காரங்களும் வேறொரு பெட்டியில் 341 சவர்க்காரங்களும் காணப்பட்டன. இரண்டு பெட்டிகளிலும் காணப்பட்ட மொத்த சவர்க்காரங்களின் எண்ணிக்கை யாது?

(2) தரம் 3 இல் 278 மாணவர்களும் தரம் 4 இல் 281 மாணவர்களும் உள்ளனர். இரண்டு தரங்களிலுமுள்ள மாணவர்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(3) ஒரு நூலகத்தில் ஒரு புத்தக இறாக்கையில் 605 நூல்கள் இருந்தன. அங்கு மேலும் 185 நூல்கள் வைக்கப்பட்டன. தற்போது இறாக் கையில் உள்ள நூல்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(4) ஒரு புகையிரதப் பெட்டியில் 178 பயணிகளும் இன்னொரு புகையிரதப் பெட்டியில் 118 பயணிகளும் இருந்தனர். இரண்டு பெட்டிகளிலும் உள்ள பயணிகளின் மொத்த எண்ணிக்கை யாது?

(5) ஒரு பழக்கூடையில் 480 தோடம்பழங்களும் 168 மாம்பழங்களும் உண்டு. கூடையிலுள்ள பழங்களின் மொத்த எண்ணிக்கையைக் காண்க.

# நீளத்தை அளப்போம் - 1

3




ஒரு மீற்றரிலும் குறைவான நீளம் ஒன்றை அளப்பதற்கும் சென்ரிமீற்றரைப் பயன்படுத்துவோம்.




**சென்ரிமீற்றருக்கான நியமக் குறியீடு cm ஆகும்.**

**1** நீளம் எவ்வளவு என அனுமானிப்போம். அனுமானித்த நீளம் சரியானதா என அளந்து பார்ப்போம்.

| அளக்கப்படும் நீளம் | அனுமானித்த நீளம் (கிட்டிய சென்ரிமீற்றரில்) | உண்மையான நீளம் (சென்ரிமீற்றரில்) |
|---|---|---|
| கணித பாடநூலின் நீளம் | .................................. | .................................. |
| பென்சிலின் நீளம் | .................................. | .................................. |
| ஆசிரியர் மேசையின் நீளம் | .................................. | .................................. |
| .................................. | .................................. | .................................. |
| .................................. | .................................. | .................................. |

2 ஆசிரியர் மேசையின் மீது சில பொருள்கள் வைக்கப்பட்டுள்ள விதம் உருவில் காட்டப்பட்டுள்ளது. பொருள்களுக்கிடையே உள்ள தூரங்களைப் புள்ளிக் கோடுகளின் வழியே அளவு கோலை வைத்துச் சென்றிமீற்றரில் அளந்து எழுதுவோம்.







ஒரு மீற்றரில் 100 cm கள் உண்டு.
1 m = 100 cm

3 சென்ரிமீற்றரில் எழுதுவோம்.

உதாரணம் : 3 m = 300 cm

(1) 3 m = ..............
(4) 10 m = ..............
(2) 5 m = ..............
(5) 15 m = ..............
(3) 7 m = ..............
(6) 17 m = ..............

4 மீற்றரில் எழுதுவோம்.

உதாரணம் : 500 cm = 5 m

(1) 300 cm = ..............
(4) 1000 cm = ..............
(2) 600 cm = ..............
(5) 1200 cm = ..............
(3) 800 cm = ..............
(6) 1600 cm = ..............

5 அட்டவணையில் உள்ள வெற்றிடங்களை நிரப்புவோம்.

| மீற்றர் (m) | சென்ரிமீற்றர் (cm) |
|---|---|
| 1 m | ................ |
| .......... | 500 cm |
| 9 m | ................ |
| .......... | 1100 cm |
| 13 m | ................ |
| .......... | 1800 cm |

**6** பாடசாலையில் உள்ள இடங்கள்/ பொருள்கள் சிலவற்றைத் தெரிந்தெடுத்து அவற்றின் நீளங்களை மீற்றர், சென்ரிமீற்றர் ஆகியவற்றில் அளந்து அட்டவணையை நிரப்புவோம்.

| அளக்கப்படும் நீளம் | மீற்றரிலும் சென்ரிமீற்றரிலும் | சென்ரிமீற்றர் |
|---|---|---|
| (1) ஆசிரியரின் மேசையின் நீளம் | 1 m 22 cm | 122 cm |
| (2) வகுப்பறையின் அகலம் | | |
| (3) ஆசிரியர் மேசையின் உயரம் | | |
| (4) | | |
| (5) | | |
| (6) | | |

**7** சென்ரிமீற்றரில் எழுதுவோம்.

**உதாரணம்** : 3 m 20 cm = 320 cm

(1) 1 m 60 cm = .............

(2) 4 m 75 cm = .............

(3) 5 m 50 cm = .............

(4) 8 m 7 cm = .............

(5) 9 m 50 cm = .............

(6) 12 m 5 cm = .............

**8** மீற்றர், சென்ரிமீற்றர் ஆகியவற்றில் எழுதுவோம்.

**உதாரணம்** : 370 cm = 3 m 70 cm

(1) 450 cm = ....................

(2) 308 cm = ....................

(3) 270 cm = ....................

(4) 625 cm = ....................

(5) 1070 cm = ....................

(6) 775 cm = ....................

# கழித்தல் - 1

4

**1** கழிப்போம்.

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 2 4 | 3 9 | 2 8 | 4 5 | 7 6 |
| − 1 2 | − 1 5 | − 2 0 | − 2 5 | − 5 0 |
| ____ | ____ | ____ | ____ | ____ |

| (6) | (7) | (8) | (9) | (10) |
|---|---|---|---|---|
| 8 0 | 5 8 | 9 4 | 9 7 | 8 9 |
| − 3 0 | − 2 8 | − 4 2 | − 7 2 | − 3 |
| ____ | ____ | ____ | ____ | ____ |

**2** கட்டத்தினுள்ளே உள்ள எந்தவோர் எண்ணிலிருந்தும் வட்டத்தினுள்ளே உள்ள எந்தவோர் எண்ணையும் கழித்து விடையைப் பெறுவோம் (இவ்வாறான 5 பிரசினங்களை உருவாக்குவோம்).

கட்டம்: 99, 57, 68, 76

வட்டம்: 30, 5, 23, 12, 51

**உதாரணம் :**

| | ப | ஒ |
|---|---|---|
| | 6 | 8 |
| − | 2 | 3 |
| | 4 | 5 |

**3** இடமிருந்து வலமாகவும் மேலிருந்து கீழாகவும் கழித்து விடையைப் பெறுவோம்.

**உதாரணம் :**

94 − 20 = 7 4
− 5 2
2 2

(1)

79 − 27 = ☐ ☐
− 3 0
____

(2)

48 − 24 = ☐☐

$$\begin{array}{r} \square\square \\ -\ 1\ 1 \\ \hline \\ \hline \end{array}$$

(3)

84 − ☐☐ = 

$$\begin{array}{r} 4\ 3 \\ -\ 2\ 1 \\ \hline \\ \hline \end{array}$$

(4)

93 − ☐☐ = 

$$\begin{array}{r} 3\ 3 \\ -\ 2\ 1 \\ \hline \\ \hline \end{array}$$

(5)

89 − 42 = ☐☐

$$\begin{array}{r} \square\square \\ -\ 2\ 0 \\ \hline \\ \hline \end{array}$$

## 4 வசனங்களை எழுதிப் பிரசினங்களைத் தீர்ப்போம்.

(1) ஒரு வகுப்பில் உள்ள 45 மாணவர்களில் 12 பேர் விளையாட்டு மைதானத்துக்குச் சென்றார்கள். இப்போது வகுப்பில் உள்ள மாணவர்களின் எண்ணிக்கை யாது?

(2) ஒரு கிளையில் 34 பூக்கள் மலர்ந்திருந்தன. அவற்றில் 24 பூக்களைப் பறித்தெடுத்தால் கிளையில் எஞ்சியிருக்கும் பூக்களின் எண்ணிக்கை யாது?

(3) ஒரு தோட்டத்தில் நடக்கூடிய தென்னங்கன்றுகளின் எண்ணிக்கை 98 ஆகும். தற்போது 53 கன்றுகள் நடப்பட்டுள்ளன. மேலும் எத்தனை கன்றுகளை நட முடியும்?

(4) ஒரு போத்தலில் 89 இனிப்புகள் இருந்தன. பிள்ளைகளுக்குப் பகிர்ந்தளித்த பின்னர் 37 இனிப்புகள் எஞ்சியிருந்தன. பகிர்ந்தளித்த இனிப்புகளின் எண்ணிக்கை யாது?

(5) ஒரு பையில் 96 மாபிள்கள் இருந்தன. இன்னொரு பையில் 72 மாபிள்கள் இருந்தன. இரண்டு பைகளிலும் உள்ள மாபிள்களின் எண்ணிக்கைகளுக்கிடையிலான வித்தியாசம் யாது?

(6) ஒரு மண்டபத்தில் 45 கதிரைகள் வைக்கப்பட்டுள்ளன. அங்கு வைக்கக்கூடிய கதிரைகளின் மொத்த எண்ணிக்கை 96 ஆகும். மேலும் எத்தனை கதிரைகளை வைக்க முடியும்?

# எண்கோலங்கள் 5

**1** கோலங்களை அறிந்து வெற்றிடங்களுக்குப் பொருத்தமான எண்களை எழுதுவோம்.

(1) **20, 22, 24, ........., ........., .........**

(2) **1, 6, 11, 16, ........., ........., ........., .........**

(3) **33, 43, 53, 63, ........., ........., ........., .........**

(4) **........., ........., ........., 79, 81, 83, .........**

(5) **........., ........., ........., ........., ........., 45, 50, 55**

(6) **........., ........., ........., ........., 46, 56, 66, .........**

**2** கோலத்திற்கேற்ப வெற்றிடங்களுக்குப் பொருத்தமான எண்களை எழுதுவோம்.

(1) **2, 5, 8, ........., ........., .........**

(2) **83, 86, 89, ........., ........., .........**

(3) **........., ........., ........., 25, 28, 31**

(4) **........., ........., 51, 54, 57, .........**

(5) **........., ........., 94, 97, 100, ........., .........**



**3** கோலத்தை அறிந்து வெற்றிடங்களை நிரப்புவோம்.

(1) **2, 6, 10, ........., ........., .........**

(2) **43, 47, 51, ........., ........., .........**

(3) **........., ........., 27, 31, 35, .........**

(4) **........., 67, 71, 75, ........., .........**

(5) **........., ........., ........., 99, 103, 107**

# பெருக்கல் - 1 | 6

## இரண்டால் பெருக்குவோம்.

**உதாரணம் :**

| | | | |
|---|---|---|---|
| | 1 | 4 | |
| × | | 2 | |
| | 2 | 8 | |



**விடை இவ்வாறே பெறப்படுகிறது.**

| ப | ஒ | |
|---|---|---|
| 1 | 4 | |
| × | 2 | |
| | 8 | ← முதலில் 4 ஆனது 2 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 2 | 0 | ← இரண்டாவதாக 10 ஆனது 2 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 2 | 8 | ← பின்னர் 8 உம் 20 உம் கூட்டப்பட்டுள்ளன. |

**1** இரண்டால் பெருக்குவோம்.

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 24 | 32 | 20 | 43 | 51 |
| × 2 | × 2 | × 2 | × 2 | × 2 |
| | | | | |

**உதாரணம் :**

| | | | |
|---|---|---|---|
| | 3 | 8 | |
| × | | 2 | |
| | 7 | 6 | |
| | 1 | | |



**விடை இவ்வாறே பெறப்படுகிறது.**

| ப | ஒ | |
|---|---|---|
| 3 | 8 | |
| × | 2 | |
| 1 | 6 | ← முதலில் 8 ஆனது 2 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 6 | 0 | ← இரண்டாவதாக 30 ஆனது 2 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 7 | 6 | ← பின்னர் 16 உம் 60 உம் கூட்டப்பட்டுள்ளன. |

**2** இரண்டால் பெருக்குவோம்.

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 29 | 35 | 37 | 46 | 48 |
| × 2 | × 2 | × 2 | × 2 | × 2 |
| | | | | |

| (6) | (7) | (8) | (9) | (10) |
|---|---|---|---|---|
| 6 8 | 7 5 | 8 8 | 9 7 | 9 9 |
| × 2 | × 2 | × 2 | × 2 | × 2 |
| | | | | |

## 3 வசனங்களை எழுதிப் பிரசினங்களைத் தீர்ப்போம்.

(1) ஒரு பரிசுப் பொதியில் இரண்டு புத்தகங்கள் வீதம் இடப்படுகின்றன. இவ்வாறான 42 பரிசுப் பொதிகளுக்குத் தேவையான புத்தகங்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(2) ஒரு கடைக்கு வரும் சிறுவர்களில் ஒருவருக்கு இரண்டு பலூன்கள் வீதம் 18 சிறுவர்களுக்கு வழங்கத் தேவையான பலூன்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(3) ஒரு பிள்ளைக்கு இரண்டு பென்சில்கள் வீதம் 49 பிள்ளைகளுக்குத் தேவையான பென்சில்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(4) ஒரு விளையாட்டுப் போட்டியின்போது ஒரு தூணுக்கு இரண்டு கொடிகள் வீதம் கட்ட வேண்டியுள்ளது. இவ்வாறு 30 தூண்களுக்குக் கட்டத் தேவையான கொடிகளின் மொத்த எண்ணிக்கை யாது?

## 4 பொருத்தமான விடையை இணைப்போம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | 5 × 5 | 40 | (6) | 2 × 5 | 45 |
| (2) | 1 × 5 | 15 | (7) | 7 × 5 | 35 |
| (3) | 8 × 5 | 25 | (8) | 4 × 5 | 50 |
| (4) | 3 × 5 | 30 | (9) | 9 × 5 | 10 |
| (5) | 6 × 5 | 5 | (10) | 10 × 5 | 20 |

ஐந்தால் பெருக்குவோம்.

**உதாரணம் :**

| | | | | |
|---|---|---|---|---|
| | | 3 | 6 | |
| | × | | 5 | |
| | 1 | 8 | 0 | |
| | | 3 | | |



**விடை இவ்வாறே பெறப்படுகிறது.**

| | ப | ஒ | |
|---|---|---|---|
| | 3 | 6 | |
| × | | 5 | |
| | 3 | 0 | முதலில் 6 ஆனது 5 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 1 | 5 | 0 | இரண்டாவதாக 30 ஆனது 5 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 1 | 8 | 0 | பின்னர் 30 உம் 150 உம் கூட்டப்பட்டுள்ளன. |

## 5 ஐந்தால் பெருக்குவோம்.

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 28 | 67 | 43 | 16 | 24 |
| × 5 | × 5 | × 5 | × 5 | × 5 |
| | | | | |

| (6) | (7) | (8) | (9) | (10) |
|---|---|---|---|---|
| 22 | 70 | 35 | 20 | 89 |
| × 5 | × 5 | × 5 | × 5 | × 5 |
| | | | | |

## 6 வசனங்களை எழுதிப் பிரசினங்களைத் தீர்ப்போம்.

(1) ஒரு வகுப்பில் 25 பிள்ளைகள் வீதம் ஐந்து வகுப்புகள் உண்டு. ஐந்து வகுப்புகளிலும் உள்ள பிள்ளைகளின் மொத்த எண்ணிக்கை யாது?

(2) ஒரு பெட்டியில் 36 பென்சில்கள் உண்டு. அவ்வாறான ஐந்து பெட்டிகளில் உள்ள பென்சில்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(3) ஒரு பெட்டியில் ஐந்து விசுக்கோத்துப் பைக்கற்றுகள் வீதம் 29 பெட்டிகளில் உள்ள விசுக்கோத்துப் பைக்கற்றுகளின் மொத்த எண்ணிக்கை யாது?

(4) முத்துமாலை ஒன்றைச் செய்வதற்கு 50 முத்துகள் தேவை, இவ்வாறான ஐந்து மாலைகளைச் செய்வதற்குத் தேவையான முத்துகளின் மொத்த எண்ணிக்கை யாது?

# பெருக்கல் - 1

6

## பத்தால் பெருக்குவோம்.

**உதாரணம் :**

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | |
| | | 2 | 3 | |
| | × | 1 | 0 | |
| | 2 | 3 | 0 | |
| | | 3 | | |

**விடை இவ்வாறே பெறப்படுகிறது.**

| | ப | ஒ | |
|---|---|---|---|
| | 2 | 3 | |
| × | 1 | 0 | |
| | 3 | 0 | ← முதலில் 3 ஆனது 10 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 2 | 0 | 0 | ← இரண்டாவதாக 20 ஆனது 10 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 2 | 3 | 0 | ← பின்னர் 30 உம் 200 உம் கூட்டப்பட்டுள்ளன. |

## 7 பெருக்குவோம்.

| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
|---|---|---|---|---|---|
| 6 4 | 8 7 | 4 0 | 3 9 | 2 0 | 2 4 |
| × 1 0 | × 1 0 | × 1 0 | × 1 0 | × 1 0 | × 1 0 |
| | | | | | |

## 8 பிரசினங்களைத் தீர்ப்போம்.

(1) ஒரு பாடசாலைப் பேருந்தில் 48 பிள்ளைகள் பயணம் செய்யலாம். இவ்வாறான இரண்டு பேருந்துகளில் பயணம் செய்யக்கூடிய பிள்ளைகளின் மொத்த எண்ணிக்கையைக் காண்போம்.

(2) ஒரு பெட்டியில் 12 புத்தகங்களை வைக்கலாம். இவ்வாறான ஐந்து பெட்டிகளில் வைக்கக்கூடிய புத்தகங்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(3) ஒரு பைக்கற்றில் 15 இனிப்புகள் உண்டு. இவ்வாறான பத்துப் பைக்கற்றுகளில் உள்ள இனிப்புகளின் மொத்த எண்ணிக்கை யாது?

(4) ஒரு நோயாளிக்கு ஒரு நாளில் ஐந்து மாத்திரைகள் வழங்கப்படுகின்றன. 60 நாட்களில் நோயாளிக்கு வழங்கப்படும் மாத்திரைகளின் மொத்த எண்ணிக்கையைக் காண்க.

(5) ஒரு பைக்கற்றில் பத்து பணிசுகள் உண்டு. இவ்வாறான 75 பைக்கற்றுகள் பாடசாலைக்குக் கிடைத்ததாயின் கிடைக்கப்பெற்ற பணிசுகளின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு?

# பின்னங்கள்

# 7

**1** அரைப்பங்கை ($\frac{1}{2}$) நிழற்றுவோம்.




**2** அரைப்பங்கு நிழற்றப்பட்டுள்ள உருவின் கீழ் கோடிடுவோம்.




**3** தரப்பட்டுள்ள வடிவங்களில் அரைப்பங்கை ($\frac{1}{2}$) நிழற்றுவோம்.



**4** தரப்பட்டுள்ள உருக்களின் காற்பங்கை ($\frac{1}{4}$) நிழற்றுவோம்.




**5** காற்பகுதி நிழற்றப்பட்டுள்ள உருவிற்குக் கீழே கோடு வரைவோம்.




**6** உருவில் நிழற்றப்பட்டுள்ள பகுதிக்கு உரிய பின்னத்தை எழுதுவோம்.



## 7 பொருள்களின் தொகுதியிலிருந்து அரைவாசியை அறிந்து கொள்வோம்.

கீழே தரப்பட்டுள்ள உருவில் 10 மாங்காய்கள் உள்ளன. இவற்றில், அரைப்பங்கு ($\frac{1}{2}$) பழுத்தவை ஆகும். பழுத்த மாம்பழங்களின் எண்ணிக்கை 5 ஆகும்.



(1) 8 பந்துகளில் $\frac{1}{2}$ எத்தனை பந்துகளாகும்?



(2) 18 பூக்களில் $\frac{1}{2}$ எத்தனை பூக்களாகும்?



## 8 பொருள்களின் தொகுதியிலிருந்து காற்பகுதியை அறிந்து கொள்வோம்.

12 பொத்தான்களில் காற்பகுதி ($\frac{1}{4}$) சிவப்பு நிறப் பொத்தான்களாகும். சிவப்பு நிறப் பொத்தான்களின் எண்ணிக்கை 3 ஆகும்.



# பின்னங்கள்



(1) 8 பந்துகளில் $\frac{1}{4}$ எத்தனை பந்துகளாகும்?



(2) 16 ஆணிகளில் $\frac{1}{4}$ எத்தனை ஆணிகளாகும்?



(3) சிவப்பு நிற முத்துகளின் எண்ணிக்கை மொத்த முத்துகளின் எண்ணிக்கையின் என்ன பின்னமாகும்?



(4) பச்சை நிற முத்துகளின் எண்ணிக்கை மொத்த முத்துகளின் எண்ணிக்கையின் என்ன பின்னமாகும்?



# திண்மப் பொருள்களும் வடிவங்களும் 8











**1** புள்ளிகளை இணைப்பதன் மூலம் நேர்கோடுகளை வரைவோம்.

(1) A, B

(2) B, C

(3) C, D

(4) D, A

(5) A, C

(6) B, D



## 2 கட்டங்களை எண்ணி வடிவங்களை வரைவோம்.

(1) 4 கட்டங்கள் நீளம், 4 கட்டங்கள் அகலமுடைய ஒரு சதுரத்தை வரைவோம்.

(2) 8 கட்டங்கள் நீளம், 5 கட்டங்கள் அகலமுடைய ஒரு செவ்வகத்தை வரைவோம்.

கட்டங்களை எண்ணி வடிவங்களை வரைவோம்.



## திண்மப் பொருள்களின் முன்பக்கத் தோற்றம், பக்கத் தோற்றம், மேற்பக்கத் தோற்றம் (திட்டம்) என்பவற்றை வரைவோம்.




## 3 கீழே தரப்பட்டுள்ள திண்மப் பொருள்களில் முன்பக்கத் தோற்றம், பக்கத் தோற்றம், திட்டம் என்பவற்றை அம்புக் குறிகளுக்கு ஏற்ப வெற்றிடங்களில் சரியாக எழுதுவோம்.

(1) ..........................................



..........................................

..........................................




4 உருக்களை அவதானித்து முன்பக்கத் தோற்றம், பக்கத் தோற்றம், திட்டம் என்பவற்றுக்கு உரிய ஆங்கில எழுத்துகளை அட்டவணையில் எழுதுவோம்.



(1)



(2)



(3)

| உருவம் | திட்டம் | பக்கத் தோற்றம் | முன்பக்கத் தோற்றம் |
|---|---|---|---|
| (1) | A | | |
| (2) | | | |
| (3) | | | |

999 இலும் 1 கூடிய எண்

**999 + 1 = 1000 - ஆயிரம்**



**1000** - ஆயிரம் **3000** - மூவாயிரம்

**2000** - இரண்டாயிரம் **4000** - நான்காயிரம்

**1** எண்பெயரை எழுதுவோம்.

(1) **5000** = ........................................ (2) **6000** = ........................................

(3) **7000** = ........................................ (4) **8000** = ........................................

(5) **9000** = ........................................

**2** வெற்றிடங்களை நிரப்புவோம்.

| எண் | எண்பெயர் |
|---|---|
| **3248** | ............................................................ |
| **4120** | ............................................................ |
| ................ | ஏழாயிரத்து முந்நூற்று முப்பத்தொன்று |
| **6050** | ............................................................ |
| ................ | எட்டாயிரத்து நானூற்று எழுபத்தேழு |
| **9990** | ............................................................ |

**3** கீழே கோடிடப்பட்டுள்ள எண்ணின் எண்பெயரை எழுதுவோம்.

(1) போர்த்துக்கேயர் கி.பி <u>1505</u> இல் இலங்கைக்கு வருகை தந்தார்கள்.

(2) பீதுருதாலாகல மலையின் உயரம் <u>2524</u> மீற்றர் ஆகும்.

(3) பாடசாலை மாணவர்களுக்குப் பகிர்ந்தளிப்பதற்காக <u>2810</u> பயிற்சிப் புத்தகங்கள் கொண்டு வரப்பட்டன.

(4) ஒரு நாடகக் காட்சிக்காக இரண்டு தினங்களில் விற்பனையாகியுள்ள நுழைவுச் சீட்டுகளின் எண்ணிக்கை <u>3100</u> ஆகும்.

(5) ஒரு செங்கல் உற்பத்தித் தொழிற்சாலையில் ஒரு வார காலத்தில் உற்பத்தி செய்யப்பட்ட செங்கற்களின் எண்ணிக்கை <u>6842</u> ஆகும்.

**4** எண் சட்டத்தில் குறிக்கப்பட்டுள்ள எண்ணையும் எண் பெயரையும் எழுதுவோம்.




**5** வெற்றிடங்களை நிரப்புவோம்.

| எண் | இலக்கம் | இலக்கம் அமைந்துள்ள இடம் | இலக்கம் வகை குறிக்கும் பெறுமானம் |
|---|---|---|---|
| 1273 | 2 | நூறினிடம் | 200 |
| 2640 | 2 | ................................ | .................. |
| 5462 | .................. | பத்தினிடம் | .................. |
| 7023 | 3 | ................................ | .................. |
| 9991 | .................. | ஒன்றினிடம் | .................. |
| 5016 | 0 | ................................ | .................. |
| 9999 | .................. | ஆயிரத்தினிடம் | .................. |

6 வட்டத்தில் தரப்பட்டுள்ள எல்லா இலக்கங்களையும் கொண்டு நான்கு இலக்க எண்கள் ஐந்தை அட்டவணையில் எழுதி அட்டவணையை நிரப்புவோம்.




| எண் | இடத்திற்கேற்ப இலக்கம் | இலக்கத்தினால் வகைகுறிக்கப்படும் பெறுமானம் |
|---|---|---|
| 5207 | நூறினிடத்து இலக்கம் 2 | 200 |
| ................ | ஒன்றினிடத்து இலக்கம் ........ | .................... |
| ................ | பத்தினிடத்து இலக்கம் ........ | .................... |
| ................ | ஆயிரத்தினிடத்து இலக்கம் ........ | .................... |
| ................ | பத்தினிடத்து இலக்கம் ........ | .................... |

7 விரித்து எழுதுவோம்.

**உதாரணம்** : 1675 = 1000 + 600 + 70 + 5

(1) 3426 = ...............................................

(2) 5059 = ...............................................

(3) 7824 = ...............................................

(4) 8203 = ...............................................

(5) 9470 = ...............................................

(6) 9090 = ...............................................

# வரைபுகள் – I

**1** ஒரு பத்திரிகை விற்பனைக் கூடத்தில் ஒரு நாளில் விற்பனையாகிய பத்திரிகைகள் பற்றிய தகவல்கள் கீழே அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

| பத்திரிகைகள் | விற்பனையாகிய பத்திரிகைகளின் எண்ணிக்கை |
|---|---|
| அறிவு | 10 |
| சுடர் | 8 |
| ஞானம் | 7 |
| ஒளி | 2 |
| முல்லை | 8 |

- மேலே தரப்பட்டுள்ள தகவல்களை ஒரு நிரல் வரைபில் குறிப்போம்.




- நிரல் வரைபிலிருந்து கீழே தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை எழுதுவோம்.

(1) கூடுதலாக விற்பனையாகியுள்ள பத்திரிகை எது?
(2) குறைவாக விற்பனையாகியுள்ள பத்திரிகை எது?
(3) சமனான எண்ணிக்கையில் விற்பனையாகியுள்ள பத்திரிகைகள் யாவை?
(4) ஒளி பத்திரிகையை விட எத்தனை சுடர் பத்திரிகைகள் கூடுதலாக விற்பனையாகியுள்ளன?
(5) அறிவு பத்திரிகையை விட எத்தனை சுடர் பத்திரிகைகள் குறைவாக விற்பனையாகியுள்ளன?

**2** குறித்த ஒரு வகுப்பில் ஜனவரி, பெப்ரவரி, மார்ச், ஏப்பிரல் ஆகிய மாதங்களில் பிறந்த பிள்ளைகள் பற்றிய தகவல்கள் கீழே உருவில் தரப்பட்டுள்ளன. அதிலிருந்து கீழேயுள்ள அட்டவணையை நிரப்புவோம்.




| பிறந்த மாதம் | தடவைகளின் எண்ணிக்கை | பிள்ளைகளின் எண்ணிக்கை |
|---|---|---|
| ஜனவரி | ||||| | 5 |
| பெப்ரவரி | | |
| மார்ச் | | |
| ஏப்பிரல் | | |

# வரைபுகள் - 1



- அட்டவணையிலிருந்து கீழே தரப்பட்டுள்ள நிரல் வரைபைப் பூரணப்படுத்துவோம்.




- நிரல் வரைபிலிருந்து கீழே தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை எழுதுவோம்.

(1) கூடுதலான பிள்ளைகள் பிறந்துள்ள மாதம் எது?

(2) ஏப்பிரல் மாதத்தில் பிறந்துள்ள பிள்ளைகளின் எண்ணிக்கை யாது?

(3) பிள்ளைகள் சமனான எண்ணிக்கையில் பிறந்துள்ள மாதங்கள் எவை?

(4) ஏப்பிரல் மாதத்தை விட மார்ச் மாதத்தில் கூடுதலாகப் பிறந்துள்ள பிள்ளைகளின் எண்ணிக்கை யாது?

# வகுத்தல் – 1

**11**

2 **ஆல் வகுப்போம்.**

**உதாரணம்** : 26 ஐ இரண்டால் வகுப்போம். அதாவது 26 ÷ 2



$2\overline{)26}$

$$\begin{array}{r} 13 \\ 2\overline{)26} \\ \underline{2}\phantom{6} \\ 06 \\ \underline{6} \\ 0 \end{array}$$

26 ÷ 2 = 13 ஆகும்.

**1** 2 **ஆல் வகுப்போம்.**

(1) $2\overline{)12}$ (2) $2\overline{)28}$ (3) $2\overline{)60}$ (4) $2\overline{)80}$

**உதாரணம்** : 29 ஐ இரண்டால் வகுப்போம். அதாவது 29÷2

$2\overline{)29}$

$$\begin{array}{r} 14 \\ 2\overline{)29} \\ \underline{2}\phantom{9} \\ 09 \\ \underline{8} \\ 1 \end{array}$$

29 ÷ 2 = 14 உம் மீதி 1 உம் ஆகும்.

**2** 2 **ஆல் வகுப்போம்.**

(1) $2\overline{)25}$ (2) $2\overline{)43}$ (3) $2\overline{)89}$ (4) $2\overline{)67}$

# வகுத்தல் – 1

11

**உதாரணம்** : 38 ஐ இரண்டால் வகுப்போம். அதாவது 38 ÷ 2

2⟌38 →



```
   19
2 ⟌38
   2
   18
   18
    0
```

38 ÷ 2 = 19 ஆகும்.

**3** 2 ஆல் வகுப்போம்.

(1) 2⟌17 (3) 46 ÷ 2 (5) 86 ÷ 2

(2) 2⟌30 (4) 50 ÷ 2 (6) 95 ÷ 2

**உதாரணம்** : 249 ஐ இரண்டால் வகுப்போம். அதாவது 249 ÷ 2

எண் பெரிதாக இருப்பினும் வகுப்பது மிக இலகுவானது

நீங்கள் சொல்வது முற்றிலும் சரி





```
    124
2 ⟌249
    2
    04
     4
     09
      8
      1
```

249 ÷ 2 = 124 உம் மீதி 1 உம் ஆகும்.

**4** நெடும் வகுத்தல் முறையில் விடையைப் பெறுவோம்.

(1) 328 ÷ 2　　　　(3) 649 ÷ 2

(2) 540 ÷ 2　　　　(4) 725 ÷ 2

**உதாரணம்** : 706 ஐ இரண்டால் வகுப்போம். அதாவது 706 ÷ 2



```
    3 5 3
2 | 7 0 6
    6
    1 0
    1 0
      0 6
        6
        0
```

706 ÷ 2 = **353** ஆகும்.

**5** நெடும் வகுத்தல் முறையில் விடையைப் பெறுவோம்.

(1) 102 ÷ 2　　　　(2) 304 ÷ 2　　　　(3) 508 ÷ 2

**உதாரணம்** : 804 ஐ இரண்டால் வகுப்போம். அதாவது 804 ÷ 2



```
    4 0 2
2 | 8 0 4
    8
    0 0
      0
      0 4
        4
        0
```

804 ÷ 2 = **402** ஆகும்.

## 6 நெடும் வகுத்தல் முறையில் விடையைப் பெறுவோம்.

(1) **204 ÷ 2** (2) **602 ÷ 2** (3) **408 ÷ 2**

## 7 பிரசினங்கள் தீர்ப்போம்.

(1) நிவாரணம் வழங்குவதற்காக 300 சீனிப் பைக்கற்றுகள் கிடைத்தன. ஒரு பொதியில் 2 பைக்கற்றுகள் வீதம் எத்தனை பொதிகளில் வைக்கலாம்?

(2) 608 தேங்காய்களைக் கொண்ட ஒரு குவியல் இரண்டு சமமான குவியல்களாக வேறாக்கப்பட்டதாயின் ஒரு குவியலிலுள்ள தேங் காய்களின் எண்ணிக்கை யாது?

(3) ஒரு பாடசாலையிலுள்ள பிள்ளைகளுக்கு ஒருவருக்கு இரண்டு கதைப் புத்தகங்கள் வீதம் வழங்குவதற்காக 970 கதைப் புத்தகங்கள் அன்பளிப்புச் செய்யப்பட்டதாயின் பாடசாலையிலுள்ள மாணவர் களின் எண்ணிக்கை யாது?

## மீட்டற் பயிற்சி - முதலாம் தவணை 12

**1** (1) வட்டத்தில் உள்ள எல்லா இலக்கங்களையும் பயன்படுத்தி மூன்று இலக்கங்களைக் கொண்ட 3 எண்களை எழுதுவோம்.




(2) நீங்கள் எழுதிய எண்களைச் சிறிய எண்ணிலிருந்து பெரிய எண் வரை ஒழுங்காக எழுதுவோம்.

(3) அவற்றின் எண்பெயர்களை எழுதுவோம்.

(4) மூன்று இலக்கங்களைப் பயன்படுத்தி 700 இற்கும் 800 இற்கும் இடையே ஓர் எண்ணை எழுதுவோம்.

**2** எண்சட்டத்தில் குறிக்கப்பட்டுள்ள எண்ணை எழுதி அதனை விரித்து எழுதுவோம்.

**உதாரணம் :**




..142.... → ..100.... + ..40.... + ..2..

(1)




.......... → .......... + ........ + ......

(2)




.......... → .......... + ........ + ......

(3)




.......... → .......... + ........ + ......

(4)




........... ➜ ........... + ........ + ......

(5)




........... ➜ ........... + ........ + ......

**3** வெற்றிடங்களை நிரப்புவோம்.

| எண் | இலக்கம் | இலக்கத்தினால் குறிக்கப்படும் பெறுமானம் |
|---|---|---|
| 154 | 4 | |
| 843 | 4 | |
| 467 | 4 | |
| 908 | 9 | |
| 692 | 9 | |
| 519 | 9 | |

**4** குறித்த பாடசாலையில் மாணவர்களிடம் அவர்கள் விரும்பும் விளையாட்டுப் பற்றி வினவப்பட்டுக் கீழே தரப்பட்டுள்ள தகவல்கள் பெறப்பட்டன.

| விரும்பும் விளையாட்டு | மாணவரின் எண்ணிக்கை |
|---|---|
| சதுரங்கம் | 275 |
| கிறிக்கெற் | 725 |
| எல்லே | 572 |

(1) அதிகமாக மாணவர்கள் விரும்பும் விளையாட்டு எது? அம்மாணவர்களின் எண்ணிக்கை யாது?

(2) குறைந்த தொகை மாணவர்கள் விரும்பும் விளையாட்டு எது? அம்மாணவர்களின் எண்ணிக்கை யாது?

(3) மாணவர்களின் எண்ணிக்கையைக் குறைந்த எண்ணிக்கை யிலிருந்து கூடிய எண்ணிக்கை வரை ஒழுங்கில் எழுதுவோம்.

## 5 கூட்டுவோம்.

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 1 1 2 | 5 1 6 | 5 2 3 | 4 0 4 | 6 0 3 |
| + 2 4 7 | + 3 6 6 | + 2 9 4 | + 2 5 8 | + 3 0 9 |
| | | | | |

## 6 பிரசினங்கள் தீர்ப்போம்.

(1) கொழும்பிலிருந்து கண்டியின் ஊடாக பதுளைக்குச் செல்லும் புகையிரதத்தில் கண்டிக்குச் செல்லும் பயணிகள் 216 பேரும் பதுளைக்குச் செல்லும் பயணிகள் 415 பேரும் உள்ளனர். புகையிரதத்தில் பயணம் செய்யும் பயணிகளின் மொத்த எண்ணிக்கை யாது?

(2) என்னிடம் 450 முத்திரைகள் இருந்தன. தந்தை எனக்கு மேலும் 365 முத்திரைகள் தந்தார். தற்போது என்னிடமுள்ள முத்திரைகளின் மொத்த எண்ணிக்கை யாது?

## 7 சென்ரிமீற்றரில் எழுதுவோம்.

(1) **1 m** (2) **4 m** (3) **6 m** (4) **8 m 60 cm** (5) **9 m 50 cm**

## 8 மீற்றரிலும் சென்ரிமீற்றரிலும் எழுதுவோம்.

(1) **200 cm** (2) **334 cm** (3) **550 cm** (4) **795 cm** (5) **902 cm**

# மீட்டற் பயிற்சி - முதலாம் தவணை 12

**9** கழிப்போம்.

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 5 4 | 9 8 | 7 6 | 9 9 | 8 7 |
| − 2 0 | − 5 5 | − 3 4 | − 7 9 | − 5 4 |
| | | | | |

**10** பிரசினங்களைத் தீர்ப்போம்.

(1) என்னிடம் 78 வெரலுப் பழங்கள் இருந்தன. அவற்றில் 35 வெரலுப் பழங்களை நண்பனுக்குக் கொடுத்த பின் என்னிடம் எஞ்சியிருக்கும் வெரலுப் பழங்களின் எண்ணிக்கை யாது?

(2) சீதாவிடம் 68 பொத்தான்கள் உள்ளன. மாலாவிடம் 45 பொத்தான் கள் உள்ளன. மாலாவை விடச் சீதாவிடம் இருக்கும் மேலதிக பொத்தான்களின் எண்ணிக்கை யாது?

(3) ஒரு வர்ணப் பெட்டியின் விலை 95 ரூபாய் ஆகும். என்னிடம் 54 ரூபாய் உண்டு. வர்ணப் பெட்டியை வாங்குவதற்கு மேலும் எவ்வளவு பணம் தேவை?

**11** கோலத்தை அறிந்து வெற்றிடத்துக்குப் பொருத்தமான எண்களை எழுதுவோம்.

(1)

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 19 | 21 | 23 | ....... | ....... | ....... | ....... | ....... | ....... | ....... |

(2)

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 64 | 74 | 84 | ....... | ....... | ....... | ....... | ....... | ....... | ....... |

(3)

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ....... | ....... | ....... | 11 | 14 | 17 | ....... | ....... | ....... | ....... |

(4)

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ....... | ....... | ....... | 48 | 53 | 58 | ....... | ....... | ....... | ....... |

(5)

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ....... | ....... | ....... | ....... | ....... | ....... | ....... | 34 | 38 | 42 |

**12** பெருக்குவோம்.

| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
|---|---|---|---|---|---|
| 6 4 | 8 7 | 4 1 | 3 9 | 2 0 | 7 5 |
| × 2 | × 2 | × 5 | × 5 | × 1 0 | × 1 0 |
| | | | | | |

**13** பிரசினங்களைத் தீர்ப்போம்.

(1) ஒரு தட்டில் 35 மலர்கள் உண்டு. இவ்வாறான இரண்டு தட்டுகளில் உள்ள மலர்களின் எண்ணிக்கை யாது?

(2) ஒரு பரிசுப் பொதியில் 5 புத்தகங்கள் வீதம் வைக்கப்பட்டுள்ளன. இவ்வாறான 24 பொதிகளில் உள்ள புத்தகங்களின் எண்ணிக்கை யாது?

(3) ஒரு போத்தலில் 48 இனிப்புகள் வீதம் இடப்பட்டுள்ள 10 போத்தல்களில் உள்ள இனிப்புகளின் எண்ணிக்கை யாது?

(4) 2 பேருக்கு ஒரு பாண் வீதம் 26 பாண்கள் எத்தனை பேருக்குப் போதுமானதாகும்?

**14** கீழே தரப்பட்டுள்ள ஒவ்வோர் உருவிலும் $\frac{1}{2}$ ஐ நிழற்றுவோம்.

(1) 

(2) 

(3) 

(4) 

(5) 

**15** கீழே தரப்பட்டுள்ள ஒவ்வோர் உருவிலும் $\frac{1}{4}$ ஐ நிழற்றுவோம்.




**16** ஒரு பக்கத்தின் நீளம் 10 கட்டங்களாக உள்ள ஒரு சதுரத்தை வரைந்து மஞ்சள் நிறம் தீட்டுவோம்.

**17** 8 கட்டங்கள் நீளம், 5 கட்டங்கள் அகலம் உள்ள ஒரு செவ்வகத்தை வரைந்து, நீல நிறம் தீட்டுவோம்.

**18** தரப்பட்டுள்ள உருவில் முன்பக்கத் தோற்றத்துக்கு மஞ்சள் நிறமும் பக்கத் தோற்றத்துக்கு சிவப்பு நிறமும் திட்டத்துக்கு நீல நிறமும் தீட்டுவோம்.



**19** எண்பெயரை எழுதுவோம்.

(1) **1570** ..................................................................

(2) **2039** ..................................................................

(3) **5001** ..................................................................

# மீட்டற் பயிற்சி - முதலாம் தவணை 12

**20** கீழே கோடிடப்பட்டுள்ள எண் பெயருக்குரிய எண்ணை எழுதுவோம்.

(1) எமது நாட்டுக்கு கி.பி. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தெட்டில் சுதந்திரம் கிடைத்தது.

(2) ஒரு தென்னந்தோட்டத்தில் குறித்த ஒரு தினம் இரண்டாயிரத்து முந்நூற்று எட்டுத் தேங்காய்கள் பறிக்கப்பட்டன.

(3) எமது பாடசாலையில் கல்வி கற்கும் மாணவர்களின் மொத்த எண்ணிக்கை நான்காயிரத்து ஐந்நூற்று இருபது ஆகும்.

**21** ஒவ்வோர் எண்சட்டத்திலும் குறிக்கப்பட்டுள்ள எண்ணை எழுதி அவற்றின் எண்பெயரையும் எழுதுவோம்.




**22** விரித்து எழுதுவோம்.

(1) **1934** = ..............................................................

(2) **4023** = ..............................................................

(3) **6562** = ..............................................................

(4) **8105** = ..............................................................

**23** உடற்பயிற்சிக் கண்காட்சி நிகழ்ச்சி ஒன்றில் மாணவர்கள் அணிந்திருந்த தொப்பிகள் கீழே உருவில் காட்டப் பட்டுள்ளன.



(1) மேலேயுள்ள தகவல்களிலிருந்து அட்டவணையை நிரப்புவோம்.

| தொப்பிகளின் நிறம் | தொப்பிகளின் எண்ணிக்கை |
|---|---|
| | |
| | |
| | |
| | |

(2) இத்தகவல்களை ஒரு நிரல் வரைபில் தருக.

(3) வரைபில் குறிக்கப்பட்டுள்ள தகவல்களிலிருந்து 2 வாக்கியங்கள் எழுதுவோம்.

**24** நெடும் வகுத்தல் முறையில் விடைகளைப் பெறுவோம்.

(1) 482 ÷ 2 (2) 565 ÷ 2 (3) 685 ÷ 2 (4) 609 ÷ 2

**25** பிரசினங்கள் தீர்ப்போம்.

(1) ஒரு தூணுக்கு இரண்டு மலர்கள் வீதம் 296 மலர்களைக் கட்டுவதற்குத் தேவையான தூண்களின் எண்ணிக்கை யாது?

(2) 408 இனிப்புகள் இரண்டு போத்தல்களில் சமமாக இடப்பட்டுள்ளன. ஒரு போத்தலில் இட்ட இனிப்புகளின் எண்ணிக்கை யாது?

# கனவளவும் கொள்ளளவும் – 1 13




- சிறிய திரவ அளவுகள் மில்லிலீற்றர்களில் அளக்கப்படுகின்றன.
- மில்லிலீற்றருக்குரிய குறியீடு *ml* ஆகும்.






தேக்கரண்டி கொள்ளும் திரவத்தின் அளவு 5 *ml* ஆகும்.



ஒரு தேநீர்க் கிண்ணம் கொள்ளும் திரவத்தின் அளவு 200 *ml* ஆகும்.



ஒரு குளிர்பானப் போத்தல் கொள்ளும் திரவத்தின் அளவு 350 *ml* ஆகும்.

# கனவளவும் கொள்ளளவும் - 1 13

**1** கீழே தரப்பட்டுள்ள திரவங்களின் அளவுகளிலிருந்து அட்டவணையை நிரப்புவோம்.

தேநீர் 200 *ml*

தீந்தை 800 மில்லிலீற்றர்

பால் 250 *ml*

தேங்காய் எண்ணெய் 975 மில்லிலீற்றர்

பிசின் 125 மில்லிலீற்றர்

நீர் 500 *ml*

| திரவம் | திரவ அளவு | |
|---|---|---|
| | எழுத்தில் | குறியீட்டில் |
| தேநீர் | 200 மில்லிலீற்றர் | 200 *ml* |
| தீந்தை | | |
| பால் | | |
| தேங்காய் எண்ணெய் | | |
| பிசின் | | |
| நீர் | | |

**2** கீழே தரப்பட்டுள்ள பாத்திரங்கள் கொள்ளும் நீரின் அளவை ஒரு அளவுச் சாடியினால் அளந்து மில்லி லீற்றரில் எழுதுவோம்.

| பாத்திரம் | திரவ அளவு | |
|---|---|---|
| தேநீர்க் கிண்ணம் | 200 மில்லிலீற்றர் | 200 *ml* |
| பழப்பாகுப் போத்தல் | ........................................ | ........................... |
| யோகட் கோப்பை | ........................................ | ........................... |
| தண்ணீர்ப் போத்தல் | ........................................ | ........................... |
| கண்ணாடிக் குவளை | ........................................ | ........................... |

**ஆசியருக்கான ஆலோசனை** ஃ திரவங்களை அளப்பதற்காக ஓர் அளவுச் சாடியைப் பயன்படுத்துக.

